20th January 1961]

SRI K. B. S. MANI : புதிய ஆரம்பக் கல்வி திட்டத்தைக் கொண்டுவர எல்லா கிராமங்களிலும் சிறு குழந்தைகள் நர்சரி ஸ்கூல் ஆரம்பிக்க சர்க்காருக்கு ஏதாவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: திட்டம் ஆரம்பக் கல்வியைப்பற்றியது. நர்சரி ஸ்கூல் ஆரம்பிக்க வழி செய்யப்படவில்லை.

SRI T. S. RAMASWAMI: நம்முடைய ராஜ்யத்தில் மூன்றில் ஒரு பகுதியில் இந்தத் திட்டம் நடைமுறையில் அமுலுக்கு வருவதாகச் சொல்லப்படுகிறது. அப்படியானால் எந்தெந்த ஜில்லாக்களில் அமுலுக்கு வரும் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சட்டசபை நடவடிக்கைகளைப் பார்த்தால் இதுபற்றிய கேள்வி ஒன்றுக்கு பதில் அளிக்கும் போது விவரங்கள் கொடுக்கப்பட்டிருப்பது தெரியும்.

SRI A. A. RASHEED : What is the percentage of expenditure that will be borne by the Central Government under this scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

*Use of Tamil in Courts*

* 22 *Q.*—SRI K. R. NALLASIVAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தற்போது நீதி மன்றங்களில் தமிழ் எந்த அளவில் உபயோகிக்கப்படுகிறது ?

(இ) தமிழை மேலும் அதிக அளவில் பயன்படுத்த சர்க்கார் இட்டிருக்கும் திட்டம் யாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Tamil is being freely used even now in Courts in the mufassal in advancing arguments and in cross-examination of witnesses. Documents in Tamil also can be filed as exhibits.

(இ) There is no such proposal, Sir.

SRI V. SANKARAN : நீதி மன்றங்களில் தமிழிலேயே பேச வேண்டுமென்று ஏற்படுத்திவிட்டால் வக்கீல்களுக்குள்ள மதிப்பும் கிராக்கியும் பெறும் அளவிற்கு பாதிக்கும் என்பதை உணர்ந்து சர்க்கார் அந்த ஏற்பாட்டை நிறுத்திக் கொள்வார்களா ?

(பதில் இல்லை.)

*Sugar*

* 23 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Union Government have consulted the State Government regarding the export of sugar; and

[20th January 1961

(*b*) if so, the reply sent by this Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. A. RASHEED: Is it a fact that the increase in the price of sugar is due to export and if so, may I know the quantity of sugar which has been exported in the last two years?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have no particulars about the export of sugar and I cannot say that there is any increase in the price of sugar and that such increase is due to export of sugar.

### *Public meetings*

*24 *Q.*—SRI A. VEDARATHNAM: *கனம் உள்ளிவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) சமீபத்தில் சென்னை நகரில் பொதுக் கூட்டங்களுக்கு கொண்டுவந்திருக்கும் கட்டுப்பாடு விதிகளை இம்மாநிலத்திலுள்ள எல்லா ஜில்லாக்களிலும் அமுலுக்குக் கொண்டுவரும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா?*

*(இ) அப்படியானால், எப்போது?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM: *சென்னையில் பொதுக் கூட்டங்களுக்கு அனுசரிக்கப்படக்கூடிய விதி நல்ல முறையிலே கூட்டங்கள் நடைபெறுவதற்கு அனுகூலமாக இருக்கும் காரணத்தால் தேர்தல் சமீபத்தில் வருவதை முன்னிட்டு இந்த மாகாணத்தில் மற்ற எல்லாப் பகுதிகளிலும் இந்த திட்டம் அமுலுக்கு வரலாம் அல்லவா? அப்படி அமுலுக்கு வந்தால் கூட்டங்களில் கலகம் இல்லாமல் நடப்பதற்கு சாதகமாக இருக்கும் அல்லவா?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *எந்தெந்த முறையில் பொதுக் கூட்டங்கள் நடைபெறவேண்டும் என்பதுபற்றிய ஏற்பாடுகளை இங்கேயுள்ள போலீஸ் கமிஷனர் செய்திருக்கிறார். இம்மாதிரி மற்ற ஜில்லாக்களிலும் அவசியம் இருந்தால் எவ்வளவு அவசியம் இருக்கிறதோ அந்த அளவிற்கு அங்குள்ள போலீஸ் சூப்ரண்டுகள் கவனம் செலுத்தி நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள்.*

SRI K. VINAYAKAM: Is it not a fact that in the City of Madras public meetings should not be held after 10 p.m. and the cumulative hours of public meeting should not be more than three hours and if so, will the Government issue instructions to the Commissioner of Police to issue licences for the use of loud-speakers from 7 p.m. to 10 p.m. instead of from 6 p.m. to 9 p.m. as is being